கழக வெளியீடு—௩௩௯




# கழகத்
# தமிழ் வினாவிடை

[முதற் புத்தகம்]




தமிழ், சமயம் பல கலைவல்ல
துடிசைகிழார் அ. சிதம்பரனார் அவர்கள்
எழுதியது.



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை.

# பதிப்புரை

தமிழ் நாடு, தமிழ் மக்கள், தமிழ் மொழி, தமிழ் நூல், தமிழ்க் கொள்கை முதலியவைபற்றித் தமிழ் மக்கள் செவ்வையான விளக்கங்களை அறிந்து நடந்துகொள்ள வேண்டுவது கட்டாயமாகும். சிறுவர் முதல் முதியர் வரையில் அவற்றை எளிதாகத் தெரிந்துகொள்ள வேண் டும் என்னுங் கருத்தால், வினுவிடை முறையிற் சில நூல் கள் வெளியிடக் கருதுகின்றோம்.

"கழகத் தமிழ் வினுவிடை" என்னும் இச் சிறு நூல் அவ் வகையில் வெளிவந்த முதல் நூலாகும். இதன் இரண்டாம் நூலும், கூடிய விரைவில் வெளிவரும்.

இந் நூல்களை எழுதியுதவும் பெரியார் தமிழும் சமயமும் பல கலைகளும் ஆராய்ந்து கோட்பாடு வழு வாமல் நீண்ட காலமாகத் தமிழ்த் தொண்டு ஆற்றி வரு கின்ற துடிசைகிழார் அ. சிதம்பரனு ரவர்களாவர். கழக மும் தமிழகமும் அவர்கட்குப் பெரிதுங் கடமைப் பட் டிருக்கின்றன.

தமிழ் மக்கள் இந் நூல் வரிசைகளையும் வாங்கிப் போற்றித் தமிழ்க் கருத்துக்களை நாடு முழுதும் விரைந்து பரவச் செய்வார்களென்று நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்








# கழகத்

# தமிழ் வினுவிடை

## (முதற் புத்தகம்)

### க. தமிழ்நாடு

(க) தமிழ்நாடு யாது?

தமிழ்மொழி தாய் மொழியாக வழங்கும் நிலப்பகுதிகள் தமிழ் நாடாகும்.

(உ) தமிழ்நாட்டின் எல்லைகள் யாவை?

*ஆதியில் தமிழ் நாடு வடக்கே பனி (இமய) மலையையும், கிழக்கே சகரர்களால் தோண்டப்பட்ட கடலையும், தெற்கே அழகிற் சிறந்த குமரிப்பாவையின் கோவிலுக்குத் தென்பால் அமைந்த குமரி நாடு, பெருவளநாடு, ஒளி நாடுகளின் தெற்கே ஓடிய

---

*புறம் 6. வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பவ்வத்தின் குடக்கும்

,, 17. தென் குமரி வட பெருங்கல்
குண குட கடலா வெல்லை
குன்று மலை காடு நாடு
ஒன்று பட்டு வழி மொழியக்
கொடிது கடிந்து கோல் திருத்தி

கன்னியாற்றையும், மேற்கே பழைய கடலையும் எல்லையாகக் கொண்டிருந்தது :*

(அ) மேற்கு, தெற்கு எல்லைகள் குறிப்பதென்ன ?

புறம் 6-ஆம் பாட்டின்கண் "உருகெழு குமரியின் தெற்கும், தொன்று முதிர் பவ்வத்தின் குடக்கும்" எனக் கூறப்பட்டதை நோக்கினால், இன்றைய குமரிமுனைக்குத் தெற்கும், மேற்கடலாகிய பவ்வத்தின் மேற்கும் தமிழ்மொழி பரவியிருந்தது என்பதாம். "தொடு கடலின் குணக்கு" என்று கூறாமல் "தொடுகடல் குணக்கு" என்றமையாற் கிழக்கெல்லை கடலே என்பதும் போதரும்.

(ஆ) வட எல்லை பனிமலை (இமயம்) என்பது எப்படி ?

ஆதிகாலத்தில் தமிழ்நாட்டின் வட எல்லை பனிமலை (இமயமலை)யாக இருந்தது. இஃது எதனால் தெரிகின்றது ? "நெடுவரையின் வடக்கு" என்று கூறாமல் "நெடுவரை வடக்கு" என்றே மேல் 6-ஆம் புறப்பாட்டுக் கூறுகின்றமையால் தெரியவரும்.

---

*மதுரைக். 70-71. தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லை
(வட பெருங்கல்-பனிமலை ; இமயமலை)

சிலம்பு :— குமரியொடு வட இமயத்து ஒரு மொழி
வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழ் ஒளி
ஞாயிற்றுச் சோழன் மகள் மணக்கிள்ளி
ஈன்ற மகன் நற் சோவண
ஈன்ற மக்கள் இருவருள் ஒரு மைந்தன்
கொங்கர் செங்களம் வேட்டுக் கங்கைப் பேர்
யாற்றுக் கரை போகிய செங்குட்டுவன்.

(ஒரு மொழி—ஒப்பற்ற மொழியாகிய தமிழ்மொழி)

(இ) வட எல்லை விந்தியமலை யானது எப்படி?

ஆரியர்கள் மத்திய ஆசியாவினின்றும் தமிழ் நாடு போந்து சிந்து ஆற்றங்கரையிற் குடியேறி, மெள்ள மெள்ளத் தமிழர் களுடன் மலைந்து, கங்கை பாயும் நாட்டைக் கைப்பற்றி "இந்துஸ்தானம்" என்ற நாட்டை வகுத்தனர்; விந்தியமலை, சாத்பூரா மலை, மகாநதி ஆகியவற்றைத் தமிழ்நாட்டின் வட எல்லையாக வைத்து, விந்திய மலைக்கு வடக்கிருக்கும் பகுதிக்கு இந்துஸ்தானம் என்றும், தெற்கிருக்கும் பகுதிக்குத் "தெற் கணம்" (தக்கணம் Deccan) என்றும் பெயரிட்டனர். இந்துஸ் தானத்தில் தமிழர்கள் உரிமை கொண்டாடுவதில்லை யென்றும், ஆரியர்கள் தெக்கணமாகிய தமிழ்நாட்டில் நுழைவதில்லை யென்றும் உடன்படிக்கை செய்துகொண்டார்கள் என்பது போதாயன சூத்திரத்தால் அறியக்கிடக்கின்றது. ஆதலின், கொஞ்ச காலம் தமிழ்நாட்டிற்கு விந்தியமலை வட எல்லையாக இருந்தது.

(ஈ) வட எல்லை வேங்கடமானது எப்படி?

கொஞ்சகாலம் சென்றபின், ஆரியர்கள் சிறுகச்சிறுகத் தமிழ்நாடாகிய தெக்கணத்தில் கூட்டங் கூட்டமாக வந்து குடியேறத் தலைப்பட்டார்கள். பிரகச்சரணர் (எல்லோருக்கும் முதலில் வந்தவர்கள்) என்றும், அஷ்டசகஸ்ரம் (எண்ணாயிரம் பேர்) என்றும், ஆறு வேலு (ஆறாயிரம் பேர்) என்றும், தில்லை மூவாயிரவர், நாங்கூர் நாலாயிரவர், திருவெண்காடு இரண்டாயி ரவர் என்றும், தென்னாட்டிலுள்ள கூட்டத்தினர் சிலர் கூறிக் கொள்வதால் இது விளங்கும்.

இந்துஸ்தானத்தை அடுத்து விந்தியமலைத் தொடரின் தென் பகுதியெல்லாம் ஆரியர்கள் குடியேறிப் பல தமிழ்மக்க ளைக் குடும்பம் குடும்பமாகவும், ஊர் ஊராகவும் ஆரியமதத்தைத் தழுவும்படி செய்தார்கள். அப்படி ஆரியமதத்தைத் தழுவிய தமிழ் மக்களே "கர்னக்கம்ம" என்ற பிரிவாரும், "வேணாடு", "முருக்கினாடு" என்ற பிரிவாரும் ஆவர். அதன்பின் பெரும

பாலும் தெக்கணத்தின் வடபாகத்தில் உள்ளவர்கள் ஆரிய மதத்தைத் தழுவி ஆரிய மொழியாகிய சமஸ்கிருதத்தைப் பயில ஆரம்பித்தவுடனே தமிழ்மொழி அவ்விடத்தில் மாறுபாடு அடைந்து **ஆந்திர** மொழி எனப்பட்டது. அவ்வாறு, ஆந்திர மொழி பேசுவார் ஆந்திரர் என்றும், அவர்கள் நாடு **ஆந்திரம்** என்றும் கூறப்பட்டன.

ஆந்திரநாடு **விந்தியம் முதல் வேங்கடம் வரை** பரவியிருந்தது. ஆதலின், அக்காலத்தில் தமிழ்நாட்டுக்கு வட எல்லை வேங்கடமாக ஏற்பட்டது. அதனையே "வடவேங்கடம் தென் குமரி" எனப் பிற்காலத்தார் கூறுவார் ஆயினர்.

வடக்கே கங்கைபாயும் நாட்டை விடாது அங்கேயே வாழ்ந்த பெரிய தமிழ்க் குடும்பங்கள் எல்லாம் (விசுவாமித்திரர் குடும்பம் - சனகர் குடும்பம் - காந்தாரன் குடும்பம் முதலியன) ஆரியமதத்தைத் தழுவிக் கொண்டன.

வடவேங்கடம் தென்குமரிக்கு உட்பட்ட தமிழ் வழங்கும் நல் உலகத்திலே ஆரியரின் பல கும்பல்கள் இவ்வாறு வந்து சேர்ந்த போதிலும், ஆந்திரர்கள் மாதிரி தமிழர்கள் ஆரிய மதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை; ஆரியர்களுக்கு ஊர்ப்புறத்தில் சேரி கட்டிக்கொடுத்துத் தனிப்பட வைத்து, வேண்டும் உதவிகளைச் செய்தார்கள். இன்றும் பார்ப்பனச் சேரி என்று வழங்கும் ஊர்ப்பெயர் இதற்குச் சான்றாம். தமிழ்மக்கள் பலர் ஆரிய மொழியைப் பயின்றனரேனும், அவ்வாரியச் சொற்களைத் தமிழில் தமிழ்முறைப்படி மாற்றிப் பேசியும் எழுதியும் வந்தார்கள். அதனால், தமிழ்மொழியும், தமிழ்நாடும் காக்கப்பட்டுப் புனித நிலையிலேயே இருக்கின்றன.

ஆயினும், ஆரிய மக்களில் பலர் தமிழ்மொழியைக் கற்றுப் பல தமிழ் நூற்களைச் செய்துள்ளமையால். அவற்றிற் பல ஆரியச்சொற்கள் கலந்துள்ளன. இங்ஙனம் ஆரிய மொழி கலந்து கலந்தே தமிழ் நாட்டின் இடம் சுருங்கிப்போயிற்று.

இருக்க இருக்க இப்போது சித்தூர்க் கோட்டம் (ஜில்லா) என்று கூறப்படும் நிலப்பாகத்தில் ஆந்திரர் குடியேறிப் பெரும்பாலும் அதனை ஆந்திரமயம் ஆக்கிவிட்டனர்.

சில ஆரியக் குடும்பங்கள் மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் மேல் கடலாகிய அராபிக் கடலுக்கும் நடுவிலுள்ள வளப்பம் பொருந்திய மலையாள நாட்டில் குடியேறி, ஆண்டுள்ள தமிழ்க் குடும்பங்களுடன் தொடர்பு (சம்பந்தம்) செய்து கொண்டு, ஆரிய மொழியைப் பரவச் செய்தும், ஆரிய மதத்தைத் தழுவச் செய்தும் அந்நாட்டை ஆரியமய மாக்கிவிட்டார்கள்.

கி. பி. எட்டாம் நூற்றூண்டு வரை மலையாள நாடாகிய சேரநாடு தமிழ்நாடாகத் திகழ்ந்தது. அதன் பின், தமிழ் மொழி ஆரியக்கலப்பால் மாறுபட்டு, மலையாள மொழியாகவும், கன்னட மொழியாகவும் வேறுபட்டது. இம் மொழியாளர் ஆந்திர மொழியைப்போல் தமிழின் வட்டெழுத்தைப் பயன்படுத்திக் கொண்டனர்.

எஞ்சியுள்ள தமிழ் நாட்டிலும் ஆரிய மொழியாளரும், ஆந்திர மொழியாளரும், ஆங்கில மொழியாளரும், இந்தி மொழியாளருமெனப் பலரும் பரவித் தத்தம் மொழிகளைத் தமிழிற் கலந்து தமிழ் நாட்டைக் குலைத்து வருகின்றனர்.

(உ) எஞ்சியுள்ள தமிழ்நாட்டையாவது பாதுகாக்க என் செயவேண்டும்?

ஆரிய மொழிக்கோ, **ஆரிய மொழியின்** சார்பான **இந்தி மொழிக்கோ** தமிழ்நாட்டில் இடம் கொடுக்கக் கூடாது. வேறு எந்த மொழிகளுக்கு இடம் கொடுத்தாலும் இந்த இரண்டு மொழிகளுக்கும் இடம் கொடுக்கக் கூடாது. இடம் கொடுத்தால் தமிழ்மொழி கெடும்; தமிழ் நாடு குறுகும். அம் மாதிரி இடம் கொடுத்தே ஆந்திர நாட்டையும், கன்னட நாட்

டையும், மலையாள நாட்டையும் நாம் இழந்தோம். ஆதலின், ஆரியத்துக்கும் இந்திக்கும் தமிழர்கள் உதவி செய்யக்கூடாது. அவற்றால் விளையும் தீமைகளைப் பலருக்கும் எடுத்து உரைத்துத் தமிழைப் பாதுகாக்க வேண்டும்; தமிழ் நாட்டைப் பாதுகாக்க வேண்டும். தமிழ் எல்லையைப் பாதுகாத்தால்தான் தமிழ் மொழி வளம் பெறும், தமிழரும் வளர்ச்சி உறுவார்கள்; தமிழ்நாடும் தன் எல்லையில் குறைவு அடையாது.

'வேறு மொழிகளுக்கு இடங்கொடுத்தாலும்' என்றது வேறு மொழிகளுக்கு இடம் கொடுக்கவேண்டும் என்பதன்று. தமிழைத் தனிமொழியாக வளர்க்க வேண்டும் என்பதே. தமிழ்மொழி ஆக்கம் கருதிப் பிறமொழிகளைப் பயிலலாம்.

---

## உ. மக்கள்

### (க) மக்கள் எல்லோரும் ஒரு கணத்தவரா? மாறுபாடு உண்டா?

மக்களில் மாறுபாடு உண்டு. எல்லோரும் ஒரு கணத்தவர் அல்லர். உடற்கூறு மாறுபாட்டால் ஐந்து கணத்தவர் ஆவர்:

(அ) இராக்கதர் (Negroes)
(ஆ) இரணியர் (Red Indians)
(இ) அவுணர் (Mangolians)
(ஈ) ஆரியர் (Caucasians)
(உ) தமிழர் (Tamilians)

### (உ) இவ் ஐங்கணங்களின் நிறம் முதலிய வேறுபாடுகள் என்ன?

(அ) இராக்கதரை நிசிசரர் என்றும், நக்கவாரர் என்றும், நரமாமிசம் புசிப்பவர் என்றும் கூறுப. அவர்கள் கறுத்த

நிறத்தையும், தடித்த உதட்டையும், சுருண்ட மயிரையும், உருண்ட கண்களையும், முறுகிய நரம்புகளையும் உடையவர்.

(ஆ) இரணியர் என்பார் இராக்கதரில் ஒரு பிரிவினர். இவர்கள் நிறத்தால் வேறுபட்டவர். இவர்களுடைய நிறம் சிவப்பு; உறுப்புக்கள் எல்லாம் இராக்கதர் மாதிரியே யாகும்.

(இ) அவுணர் என்பார் ஊனர் (ஊனர் – பூனை, எலி, பல்லி, பாம்பு முதலிய எல்லாவித ஊன்களையும் அருந்துபவர்.) அவர்கள் மஞ்சள் நிறமும், தட்டை முகமும், பட்டை மூக்கும், செம்பட்டை மயிரும் உடையவர்.

(ஈ) ஆரியர் என்பார் வெண்மை அல்லது கோதுமை நிறத்தை உடையவர்; நல்ல உயரமும், கைகால்கள் திரண்டும் உள்ளவர்; கூரிய மூக்கையும், பூனைக் கண்ணையும் உடையவர். மயிர் சிறுபான்மை கறுத்தும் பெரும்பான்மை செம்மை வெண்மை அளைந்தும், சுருண்டும் இருக்கும்.

(உ) தமிழர் என்பார் பெரும்பான்மை பொன் நிறத்தையும் சிறுபான்மை கறுப்புக் கலந்த பொன் நிறத்தையும் உடையவர். மூக்கும், தலையும் ஆரியரினின்றும் சிறிது வேறுபடும். மற்ற உடல் அமைப்புக்கள் எல்லாம் ஆரியருடையன போன்றவையே.

## (௩) மக்கள் முதன்முதல் எங்கே உண்டானார்கள்?

உலகந் தோன்றி நிலவிய பின்னர், மக்கள் உயிர்வாழ்வதற்குத் துணையாக உலகில் முதன்முதல் தாவரங்களும் (புல் - பூண்டு - மரம் முதலியன); பின் ஊர்வன - நீர்வாழ்வன - பறப்பன - மிளிர்வன முதலிய உயிர் (பிராணி)களும் தோன்றின; பின் ஆறறிவையுடைய மக்கள் தோன்றினர்.

மக்கள் உயிர் வாழ்வதற்குத் தாவரமும் ஏனைய உயிர் (பிராணி)களும் வேண்டும். ஆதலால் அவை முன்னால் படைக்கப்பட்டன.

கரு உண்டாதற்கு உடலில் நடுப்பாகமாயும், வயிற்றுத் தீயால் வெப்பம் மிகுந்துள்ள இடமாயும், உயிர் வளர்வதற்கு வசதியாயும் உள்ள கருப்பை வேண்டுவதுபோல, உலகில் மனித கணங்கள் தோன்றிய இடம் உலகின் நடுப் பாகமாகிய கடல் கொண்டொழிந்த நிலப் பரப்பும், விந்திய மலை முதல் குமரி வரை உள்ள நிலப்பரப்பும் ஆகும்.

உலகின் நடு வரை (Equator) யும், இப்போது கிரீனிச்சை (Greenwich) நடுவாக வைத்து எழுதப்பட்டிருக்கும் படத்தில் 80-வது பாகை என்று குறிப்பிடப்பட்டிருக்கும் உலகின் குறுக்கு வரை (Axis) யும் சேரும் இடம்தான் உலகின் நடுப்பாகம் ஆகும். ஆங்கு, 49 கொடுமுடிகளையுடைய மேரு என்னும் மணிமலையும், மேருமலையினின்றும் பெருகி ஓடின பேராறும், பஃறுளியாறும் இருந்தன; ஆதலின், அந்த நடு வரைக்கு வடக்கே $23\frac{1}{2}$ பாகை (degree Latitude) யும் தெற்கே $23\frac{1}{2}$ பாகை (degree) யும் உள்ள நிலப்பாகமே வெப்பம் மிகுந்த நாடாகவும், குறிஞ்சி நிலமாகவும், வளப்பம் பொருந்தியதாகவும், மனிதத் தோற்றத்திற்கு உரிய இடமாகவும் இருந்தது. ஆதலின், அந்த நாட்டிலேதான் மனிதர்கள் தோன்றினர்கள் என்று, பேராசிரியர் ஏகல், பேராசியர் கீத் முதலிய ஆராய்ச்சியாளர் கூறுகிறார்கள்.

(ச) அந்த நாட்டுக்கு என்ன பெயர் ?

தமிழர் அந்த நாட்டைக் குமரிக்கண்டம் என்றும், ஆங்கிலர் இலெமூரியாக் கண்டம் என்றும், நிலநூல் வல்லார் காண்டுவானு (Gondwana land) நிலப் பரப்பு என்றும் கூறுகிறார்கள்.

(ரு) குமரிக்கண்டம் எத்தனை நாடுகளாகப் பகுக்கப்பட்டு இருந்தது ?

தென் அயனவரைக்குத் தென்பாகமுள்ள நாடு ஒளிநாடு என்றும், தென் அயன வரைக்கும் நடுவரைக்கும் இடையிலுள்ள நாடு பெருவள நாடு என்றும், நடுவரைக்கும் 10-ஆம்

பாகை (degree) வரைக்கும் இடையிலுள்ள நாடு குமரி நாடு என்றும், அதற்கு வடக்கே உள்ள நாடு சேர சோழ பாண்டிய நாடுகளெனவும் பகுக்கப்பட்டிருந்தன.

தென் அமெரிக்காவில் நடுவரை ஓடும் இடங்களில் சிவப்பு இந்தியர் (இரணியர்)களும், ஆஃப்ரிக்காவில் நடுவரை ஓடும் இடங்களில் கறுப்பு நீகிரோவர் (இராக்கதர்)களும், ஆஃப்ரிக்காவுக்கும் பெருவளநாட்டிற்கும் இடையிலிருந்த நாட்டில் ஆரியரும், பெருவளநாட்டில் தமிழரும், பெருவளநாட்டிற்குக் கீழ்ப்பாகத்தில் இருந்த நிலப்பாங்கில் மங்கோலியர் (அவுணர்)களும் தோன்றி வளர்ந்தார்கள். ஆரியர் பிறந்த நாடானது கடல்கோட் படவே அவர்கள் வடக்கே மத்திய ஆசியா, வடதுருவம் முதலிய இடங்கட்குச் சென்றுவிட்டார்கள். குமரிக்கண்டமாகிய பெரிய நிலப்பாங்கில் இந்த ஐந்து கணத்தாரும் வாழ்ந்து வந்தபோதுதான் எல்லோருக்கும் பொதுவான மொழி ஒன்று இருந்தது. அதுதான் பழந்தமிழ். பிறகு கடல்கோள்களால் மக்கள் பிரிவுபடவே வெவ்வேறு மொழிகள் உண்டாயின.

## (கூ) இமயமலை தோன்றியது எப்போது?

இமயமலை தோன்றி 2,00,00,000 (இரண்டு கோடி) ஆண்டுகள் ஆகின்றன. இரண்டு கோடி ஆண்டுகளுக்கு முன் திபேத் பீடபூமிக்கும் விந்திய மலைக்கும் (தெக்கண பீடபூமிக்கும்) இடையில் தொன்மூமுதிர் கடலாகிய அராபிக்கடல் விரிந்திருந்தது. அது கடலாயிருக்கும்போது வங்காளக் குடாக்கடல் நிலமாயிருந்தது. மற்றோர் கடல்கோள் காலத்தில், அஃதாவது, இரண்டு கோடி ஆண்டுகளின் முன், பனி (இமய) மலை மேலே எழ, விந்தியமலைக்கும் பனி (இமய) மலைக்கும் நடுவிலுள்ள கடல் சுவறிற்று. அப்போது சகரர்கள் மேல் கடலைக் கீழ்க்கடலோடு இணைத்து வாணிபம் செய்யும்பொருட்டு ஒரு பெரிய கால்வாய் வெட்டி வாணிபம் செய்து வந்தார்கள். பின் சகரர்களுடைய கால்வாய் இருந்த நிலப்பரப்பு கடலாயிற்று. அதனால் அக் கடலுக்குத் தொடுகடல் என்று பெயர் வந்தது.

(எ) சகரர்கள் யார் ?

சகரர்கள் சோழர்குடியிற் பிறந்தவர்கள்; ஆரியர்கள் அல்லர். 10,000 ஆண்டுகளுக்கு முன்தான் ஆரியர்கள் வந்தனர்; அப்படி வந்த அவர்கள் இரண்டு கோடி ஆண்டுகளின்முன் இருந்த தமிழர்கள் ஆகமாட்டார்கள்.

(அ) தமிழர்களில் பழங்குடி மக்கள் யார் ?

*சேர - சோழ - பாண்டியரும், ஒளியரும் ஆவர்.

திருக்குறள் உரையில் பரிமேலழகர், 'உலகம் தோன்றின நாள்முதல் நின்று நிலவிய பழங்குடி மக்கள் சேர, சோழ, பாண்டியர் என்று கூறுவதை நோக்குங்கள்.

(கூ) ஒளியர் யார் ?

ஒளியர் ஒளிநாட்டு வேளாளர். "ஒளியராவர்" பிறமண்டலங்களை அரசாளுதற்குரிய வேளாளர்" எனக் கலித்தொகை உரையில் நச்சினார்க்கினியர் கூறுவதை நோக்குங்கள்.

(கo) எந்தெந்த நாட்டிற்கு யார் யார் பழங்குடி மக்கள்?

கறுப்பு நீகிரோவர் ஆஃப்ரிக்கா நாட்டின் பழங்குடி மக்கள்; சிவப்பு நீகிரோவர் தென் அமெரிக்கா நாட்டின் பழங்குடி மக்கள்; மங்கோலியர் சீனநாட்டுப் பழங்குடி மக்கள்; தமிழர் விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள நாட்டின் பழங்குடி மக்கள். தமிழர்களுக்கு ஆதியில் அணித்தாயிருந்து வாழ்ந்துவந்த ஆரியர், தங்களுடைய நாட்டைக் கடல் கொண்டொழிய, நடு ஆசியாவை இருப்பிடமாகக் கொண்டார்கள். அவர்கள் முதலில் காகஸஸ் மலைப்பக்கங்களிலும், பின் நாளடைவில் வட துருவத்துக்கு அணித்தாகவும் சென்று வாழ்ந்தவர்கள்; ஆகையால், அவர்களுக்குக் காகேசியர் என்ற பெயரும் உண்டு.

---

* "கற்றோன்றி மட்டோன்றாக் காலத்தே
முற்றோன்றி மூத்த பழங்குடி" —கல்லாடம்.

(கக) இந்துக்கள் யார்?

10,000 ஆண்டுகளின் முன்னர், காகேசியரில் ஒரு கூட்டத்தார் தாம் இருந்த நாட்டைவிட்டு மேற்கே ஐரோப்பாவிற்கும், மற்றொரு கூட்டத்தார் இந்தியாவிற்கும் புறப்பட்டார்கள். மேற்கே சென்றவர்கள் ஜெர்மனி முதலிய இடங்களில் தங்கினார்கள். கிழக்கே சென்றவர்கள் கைபர், காபூல், போலன் கணவாய்களின் வழியாகச் சிந்து ஆற்றங்கரையில் குடியேறினார்கள். பின்னவர்களாகிய ஆரியர்கள் சிந்து ஆற்றங்கரையில் குடியேறுவதற்கு முன்னரே, தமிழர்கள் அராபியர்களுடனும் பாரசீகர்களுடனும், அக்கேடியர், சுமேரியர், அசிரிய தேசத்து அசுரர், ஃபினீசியர் முதலியோர்களுடனும் தரைவழியாகவும் தண்ணீர் வழியாகவும் வாணிபம் செய்துவந்தார்கள். அராபியர்களும் பாரசீகர்களும் தம் நாட்டில் விளையும் பேரீச்சை, பெருங்காயம் முதலிய பொருள்களை ஒட்டகத்தின்மேல் ஏற்றிக்கொண்டு வந்து, தமிழ்நாட்டில் மாறி, தமிழ்நாட்டில் விளையும் சந்தனம், மயில் இறகு, மிளகு, ஏலக்காய், இலவங்கம் முதலிய பொருள்களையும், பணத்தையும் கொண்டு செல்வர். அவர்கள் எல்லோரும் அக் கணவாய் வழியாகப் போகும்போது சிந்து ஆற்றங்கரையில் குடியேறிய ஆரியர்கள் அவர்களை மறித்து, அடித்து வழிப்பறி செய்துவந்தார்கள். பாரசீகர்களும் அராபியர்களும் அடிப்பவர்களை "இந்து" "இந்து" என்று சொல்லிக் கூச்சலிட்டுவந்தார்கள். "இந்து" என்னும் சொல் பாரசீக மொழியைச் சேர்ந்தது. "இந்து" என்றால் அம் மொழியில் திருடன், கொள்ளைக்காரன் என்பது பொருள். அதுமுதல் ஆரியர்களுக்கு 'இந்துக்கள்' என்று பெயர் உண்டாயிற்று.

(கஉ) இந்துக்களுக்கும் தமிழருக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பென்ன?

பிறகு, ஆரியர்கள் தமிழர்களுடன் மலைந்து, ஆறுமாதம் சண்டை செய்து, கங்கை பாயும் நாட்டிடை இருந்த 96 கோட்டைகளையும் 142 நகரங்களையும் நெருப்புக்கு இரையாக்கித் தங்கள் மதத்தில் சேராத தமிழ்க் குடும்பங்களை நாசப்படுத்தி

னார்கள். அவர்களுக்குத் தப்பினவர்கள் விந்திய மலைக்குத் தெற்கே ஓடிவிட்டார்கள். பல தமிழ்க் குடும்பங்கள் ஆரிய மதத்தைக் கைப்பற்றி அங்கேயே நிலைத்துவிட்டன. அப்படி நிலைத்தவற்றில் விசுவாமித்திர குடும்பமும், சனகர் குடும்பமும், காந்தாரர் குடும்பமும் சில ஆகும்.

பிறகு, பனிமலைக்கும் விந்தத்துக்கும் இடையிலுள்ள நாடு முழுதும் ஆரியர்களாகிய இந்துக்கள் வசமாயின. ஆகவே, தமிழர்களுக்கும் இந்துக்களுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டது. அவ் உடன்படிக்கைப்படி ஆரியர்கள் விந்தியமலையைத் தாண்டித் தெற்கே போவதில்லை என்றும், ஆரியர்களாகிய இந்துக்கள் கைப்பற்றிய இந்துஸ்தானத்தில் தமிழர்கள் நுழைவதில்லை என்றும் ஏற்பாடு செய்துகொண்டார்கள். ஆபஸ்தம்பர், போதாயனர், வைகானசர் முதலிய ஆரிய இருடிகள் உடன் படிக்கையை மீறித் தெக்கணத்துக்குப் போகிறவர்களுக்கு இன்ன தண்டனை என்று தங்களுடைய சூத்திரங்களில் விதித்துள்ளார்கள்.

(கரு) தமிழர்கள் இந்துக்களா ?

தமிழர்கள் இந்துக்கள் அல்லர். ஆரியர்களே இந்துக்கள் ஆவார்கள். இந்துக்கள் வசித்த இடம் இந்துஸ்தானம். தமிழர்கள் தங்களை இந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளுவது தவறு. மிகவும் இழிவானது. தமிழர்கள் இதனை உணர்ந்து இனிமேலாவது தங்களை இந்துக்கள் என்று கூறிக்கொள்ளாமல் இருப்பார்களாக !

(கசா) இந்துக்களில் சாதி வேற்றுமை உண்டா ?

உண்டு. இந்துக்களில் ஆதியில், அஃதாவது, இந்துஸ்தானம் ஏற்படுகிறவரை, சாதிவேற்றுமை கிடையாது. இந்துஸ்தானம் ஏற்பட்ட பிற்பாடு நாற் சாதிப் பகுப்பு ஏற்படுத்தப் பட்டது.

வேள்வி செய்பவன் **பிராமணன்** என்றும், நாட்டை ஆள்பவன் **க்ஷத்திரியன்** என்றும், வியாபாரமும் உழுதல் தொழிலும் செய்பவன் **வைசியன்** என்றும், மேலே கூறிய மூன்று குலத்தார்க்கும் ஏவல் தொழில் செய்பவன் **சூத்திரன்** என்றும் பாகுபாடு செய்தார்கள்.

(கரு) தமிழர்களுக்கு மேலே கூறிய நான்கு சாதிப் பாகுபாடுகள் உண்டா?

கிடையா. தமிழர்கள் மேலே கூறிய சாதிகள் எவற்றிலும் சேரமாட்டார்கள்.

(கசா) இந்துக்களிடையே உள்ள சாதி வேற்றுமைகள் தொழில்பற்றியவையா? பிறப்பினைப்பற்றியவையா?

இந்துக்களிலும் ஆதிமுதல் சாதிவேறுபாடுகள் தொழில் பற்றியவையே; பிறப்புப்பற்றியவை யல்ல. பிறப்பினால் அவர்கள் ஒரே இனமாய்த்தான் இருந்தார்கள். பகவத்கீதையும், பாரதத்தில் அநுசாசநிக பருவமும், இருக்கு வேதமும் அப்படித்தான் கூறுகின்றன.

ஆனால், வேள்விச் சடங்கையும், ஏனைய சடங்குகளையும் செய்து வாழ்க்கை நடத்துவது எளிதாயும், உயர்வை யளிப்பதாயும் இருந்ததைக் கண்ட பிராமணர்கள், தொழில் பற்றிய மேன்மையைப் பிறப்புரிமையாக மாற்றிவிட்டால் தங்களுக்கு நலமாயிருக்கும் என்று கண்டுகொண்டார்கள்; அன்றியும், அவ்வாறு செய்துவிட்டால், தாங்கள் வேள்விச் சடங்குகளைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், வேள்வி செய்தலேயன்றி வேறு எந்த வேலையைச் செய்தாலும், எப்படி ஒழுக்கங் கெட்டாலும் பிராமணர்களாகவே இருந்துகொண்டு பிராமணர்களுக்குரிய எல்லா மேன்மைகளையும் பெறலாம் என்றுங் கண்டுகொண்டார்கள். இதற்கு வழியென்ன? அரசர்களாகிய க்ஷத்திரிய வகுப்பினரைக் கைக்குள் போட்டுக்கொள்ள வேண்டும்; அவர்களுக்குப் பிறப்புரிமை காட்டினால்தான் தம் பிறப்புரிமை நிலைக்

கும்; ஆகையால் க்ஷத்திரிய சாதியில் அரசன்மகனாக ஒருவன் பிறந்தால், அவன் முட்டாளாகவோ, பேடியாகவோ, திறமையில்லாதவனாகவோ இருந்தபோதிலும், அவன் அரசுரிமையுடையவனே என்று போதிக்கத் தொடங்கினர். அரசர்கள் மிகவும் நல்லதாயிற்று என்று இவர்களுடன் ஒத்துப்பாடலானார்கள்; எனவே, எளிதில் தொழில்பற்றி எழுந்த நான்கு சாதிகளையும், பிராமணர்கள் பிறப்புப்பற்றியனவாகச் செய்து பழக்கத்திற்கும் கொண்டுவந்துவிட்டார்கள்.

இந்துக்கள் என்ற ஆரியர்கள்தம் ஒழுக்கநூல்களாகிய ஸ்மிருதிகளில், பிராமணன் அரிசிவிற்றாலும், சோறு விற்றாலும், அரசியல் அலுவல் செய்தாலும், பிராமண வேலையாகிய வேள்வி செய்தல் முதலிய வைதிக காரியங்களைத் தவிர வேறு எத்தொழில் செய்தாலும் பிராமணன் ஆகமாட்டான், சண்டாளன் ஆவான் என்று கூறப்பட்டுள்ளது. இப்போது, அந்த விதிகள் எல்லாம் ஏட்டுச் சுரைக்காயாய் இருக்கின்றதைப் பார்க்கலாம்.

இதனால், இன்றும், ஒழுக்கம் கெட்ட ஒரு பிராமணனும், ஒழுக்கம் உள்ள ஒரு தமிழனும் சிறப்புப் பெற ஓர் இடத்திற்குச் சென்றால், முதலில் ஒழுக்கம் கெட்ட பிராமணனுக்குச் சிறப்புச் செய்துவிட்டுத்தான் பிறகு ஒழுக்கமுள்ள தமிழனுக்குச் சிறப்புச் செய்வதைப் பார்க்கலாம்.

கெட்டாலும் பிராமணர்கள் பிராமணர்களே என்று பிறப்புரிமையைக் கொண்டுவந்து நுழைத்துவிட்டார்களாதலால், இஃது எளிதாயிற்று. இதையே தமிழர்களிடமும் நுழைத்துவிட்டார்கள். ஆதலின் தற்காலம் பிறப்பினைப்பற்றியுள்ள வருணவேறுபாடு தொழில்பற்றி முதலில் எழுந்ததுதான் என்று என்றைக்குத் தமிழர்கள் உணருகிறார்களோ அன்றுதான் நாடு நாடாகும்.

(கஎ) தமிழர்களுள் வகுப்புக்கள் உண்டா?

“பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்”

என்ற வேத வாக்கின்படி பிறப்பினுல் தமிழ்மக்கள் அனைவரும் ஒரு குலத்தினரே. ஆனுல், அவரவர்கள் தாம் வாழும் இடத்துக்குத் தக்கபடியும், காலத்துக்குத் தக்கபடியும் ஒழுக்கத்தால் மாறுபடுவார்கள்.

ஒரேமாதிரி ஒழுக்கமுடையவர்கள் ஒரு கூட்டத்தாராகச் சேர்ந்து வாழ்வதை நாம் பார்க்கிறேம். அம்மாதிரி ஏற்பட்ட வகுப்புக்களே தமிழ்நாட்டில் உள்ளன. அம்மாதிரி, 18 வகுப்புக்கள் தமிழர்களுக்குள் உண்டு. அவர்களைப் பதினெண் கணங்கள் என்று நூல்கள் கூறும். பிற்றை நாட்களில் கணங்கள் என்ற சொல்லுக்குப் புராணப் பொருள் கூறி மக்கள் மயங்குவாராயினர்.

இப் பதினெண் கணங்கள் தவிர வேறு பதினெண் தொழிலாளர்களும் உண்டு. அத் தொழிலாளர்களாகிய 18 கூட்டத்தாரும் ''பள்ளுப்பறை பதினெட்டு வகுப்பார்''எனக் கூறப்படுவர்.

சாதி என்ற சொல்லே ஆரியர் தமிழ்நாட்டில் நுழைந்து, தமிழ்மக்களுடன் கலந்தபின் தமிழ்வழக்கில் வந்ததாகும்.

பதினெண் தொழிலாளர்களையும், 18 வகுப்பார்களையும் பற்றி முதற் கரிகாலன் காலத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று இன்றும் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் கருவறையின் குமுதவரையில் (நிலமட்டத்துக்கு மேல் போட்டிருக்கும் கல்வரிசை) பொறிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்:

மக்கள் உணவுக்கு வேண்டிய தானியங்களை விற்பவன் கூலவாணிகன்; எண்ணெய் விற்பவன் எண்ணெய் வாணிகன் அல்லது செக்கான்; துணி விற்பவன் அறுவை வாணிகன்; இலை விற்பவன் இலை வாணிகன்; பூ விற்பவன் பூ வாணிகன்; சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றுவோன் அய்யன், அல்லது கணக்காயன், அறவழியில் நிற்போன் அந்தணன்; அரசுக்கட்டில் ஏறுபவன் அரசன்; முடி தரித்து அரசு செய்பவன் முடிமன்னன்; முடி தரியாதவன் சிற்றரசன்; உழுதல் தொழில் செய்பவர்களுக்குப் பொதுவாக வேளாளர் என்று பெயர் இருந்தாலும், அதில் உழவர், மள்ளர், பள்ளர் முதலிய உட்பிரிவுகள் உண்டு; உழுவித்து

உண்போரும் செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்து இருப்பவரும் வேளாளர்; அவ் வேளாளர்கள் தொண்டை நாட்டாராயிருந்தால் தொண்டை நாட்டு வேளாளர், துளுவ நாட்டாராயிருந்தால் துளுவ வேளாளர், பாண்டி நாட்டாராயிருந்தால் பாண்டி வேளாளர், சோழ நாட்டாராயிருந்தால் சோழிய வேளாளர், கொங்கு நாட்டாராயிருந்தால் கொங்கு வேளாளர், (கொங்கர், கோசர்) ஈழ நாட்டாராயிருந்தால் ஈழ நாட்டு வேளாளர் எனப்படுவர்; பறை கொட்டிப் பிழைப்பவர் பறையர்; முரசு அறைபவர் வள்ளுவர்; சாக்கைக்கூத்து ஆடுபவர் சாக்கையர்; ஊர்க் கணக்கு எழுதுபவர் கணக்கர்; கணக்கரில் அரசரால் சீரும் சிறப்பும் பெற்றவர் சீர்கணக்கர்; சிவந்த ஈட்டியைத் தாங்கிச் சண்டை செய்தவர் செங்குந்தர்; வேலைத் தாங்கிச் சண்டை செய்தவர் வேலவர்; காலாட் படையில் இருந்தவர் காவிலியர்; குதிரை, யானை முதலிய மாக்களை நடத்தியவர் மாவிலியர்; தேரை நடத்தியவர் பூவிலியர்; யாழ் வாசிப்பவர் பாணர்; தோல் பதனிட்டு வேலை செய்பவர் துன்னல்காரர், (சக்கிலியர்); இவ்வாறு நாம் கூறிக்கொண்டே போகலாம்.

மேலே கூறியவற்றை உற்று நோக்கினல், தமிழ்நாட்டில் வகுப்புக்களை எப்படி வகுத்திருக்கிறார்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரியவரும்.

(கவு) இம்மாதிரிப் பிரிவுகள் வேறு நாட்டாரிடையும் உண்டா?

உண்டு. அராபி தேசத்தில் முகம்மதியர்களுக்குள் நான்கு பெரிய பிரிவுகள் உண்டு. அவை: ஷேக், சையத், சுன்னத், பட்டான்ஸ் என்பன. ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள கிறித்தவர்களில் மூன்று பெரும் பிரிவுகள் உண்டு. அவை: புரோடெஸ்டண்ட், கிரீக்சர்ச், உரோமன் கத்தோலிக் என்பன.

ஆதலின், ஆரிய நான்கு சாதிகளும், முகம்மதியருடைய நான்கு பிரிவுகளும், கிறித்தவர்களுடைய மூன்று பிரிவுகளும் தமிழர்களுக்கு ஒவ்வா.

முகம்மதிய மதம் எற்பட்டு இப்போதைக்கு (கி.பி.1942—622 =) 1320 ஆண்டுகள் ஆகின்றன. கிறித்து மதம் எற்பட்டு இற்றைக்கு 1942 ஆண்டுகள் ஆகின்றன. ஆனால், தமிழ்நாட்டில் தமிழர்க்குள் உள்ள பதினெண் பிரிவுகள் இன்ன காலத்தில்தான் எற்பட்டன என்று கூறுவதற்கு இயலா. பன்னெடுங் காலத்திற்கு முன்னர் ஆகும்.

(கக) தமிழர்களுக்கு எற்பட்ட சமயம் என்ன?

தமிழர்களுக்கு இயற்கையில் எற்பட்ட சமயம் சைவ சமயம். உலகம் முழுவதும் ஒரு காலத்தில் சைவ சமயமே பரவி இருந்தது. பின்னர், ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு மதக் குருமார் தோன்றி ஒவ்வொரு மதத்தை நிலைநாட்டிச் சைவர்களில் இருந்தே அதற்கு மக்களைச் சேர்த்து, அதனைப் பெருகச் செய்துபோயினர்.

கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் இருந்த கவுதம சாக்கிய முனி ஒரு மதத்தைப் புதிதாக வகுத்து, அதனைப் பின்பற்றும் ஒரு கூட்டத்தை எற்படுத்தி அதனைப் பெருக்கும் வழியையுங் காட்டிச் சென்றனர்.

1942 ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய இயேசு நாதர் ஒரு மதத்தை எற்பாடு செய்து, அதனைப் பின்பற்றும் ஒரு கூட்டத்தையும் உண்டு செய்து, அக் கூட்டத்தைப் பெருக்கும் வழியையும் காட்டிச் சென்றார்.

அதுபோலவே கி. பி. 622-ல் முகம்மது நபியும் செய்தார். அதுபோலவே கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் இருந்த சங்கரரும், கி. பி. 11-ஆம் நூற்றாண்டில் இருந்த இராமாநுஜரும், கி. பி. 14-ஆம் நூற்றாண்டில் இருந்த மாத்வரும், இன்னும் பிற்காலத்தில் வந்த தயானந்த சரஸ்வதி, பிளாவட்ஸ்கியம்மையார், கர்னல் ஆல்காட் முதலியோரும் செய்து போயினர். உலகில் எற்பட்ட எண்ணிறந்த மதங்களிலும் சென்று சேர்ந்து அதனைப் பெருக்குபவர் தமிழ்நாட்டுத் தமிழ்மக்களே யாவர். தமிழ்

மக்கள் இதனை உற்று உணரவேண்டும். எதனைக் கண்டு வேறு மதங்கட்குச் செல்லுகிறார்களோ அறியோம். தங்கள் நாடும், தங்கள் மதமும், தங்கள் மொழியும் குறுகிப்போகின்ற வகையை அவர்கள் உணரமாட்டோம் என்கிறார்கள். எப்போது தமிழர்கள் அதனை உணர்ந்து, மீண்டும் தமிழர்கணங்களுள் வந்து சேருகிறார்களோ அன்றே தமிழ்நாட்டுக்கு நற்காலம் பிறக்கும்.

(உ௦) வேறு மதங்களுக்குச் சென்றவரைத் திரும்பச் சேர்த்துக் கொள்ளலாமா ?

சேர்த்துக்கொள்ளலாம். அவர்கள் எல்லாரும் தாங்கள் செய்த பிழையை உணர்ந்து அதற்காக மனம் வருந்துவார்களானால், அதுவே போதும்.

(உக) தமிழ்நாட்டில் வழக்கில் இருக்கிற குலம் என்ற சொல் எதனைக் குறிக்கிறது ?

குலம் என்பது தமிழ்ச் சொல். அது சாதியைக் குறிப்பது அன்று. குலம் - கூட்டம் என்று பொருள். குவித்து வைத்திருப்பது குலம்; குலம் நீண்டு கூலம் என்றாயிற்று. ஒரேவிதமான பொருள்கள் சேர்ந்திருப்பதற்குக் கூலம் என்று பெயர். நெற்குவியல், சோளக் குவியல், எட் குவியல் முதலியன கூலம் என்று சொல்லப்படும். அதுபோல, மேலே கூறிய தமிழ் மக்களுள் ஒரேவிதமான ஒழுக்கத்தையுடைய மக்கட் கூட்டத்திற்குக் குலம் என்று பெயர். அதனாலேதான் தமிழ் இலக்கணங்களில் "ஒத்த குலமும், ஒத்த கல்வியும், ஒத்த ஒழுக்கமும் வாய்ந்தவர்களே காதல் கற்பு என்னும் மணத்திற்குத் தக்கவர்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது. இன ஒற்றுமையின்றேல் மன ஒற்றுமை ஏற்படாது; வாழ்க்கையும் பண்படாது.

(உஉ) தமிழ்நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் தமிழர் ஆவார்களா ?

தமிழ்நாட்டில் தமிழ்மொழியைப் பேசுபவரும், தமிழர் மதமாகிய சைவத்தைப் பின்பற்றுபவரும், தமிழர் கொள்கைகளா

கிய உயிர்களிடத்து அன்பு, இரக்கம், கொல்லாமை, புலால் உண்ணுமை முதலிய அறங்களைக் கைக்கொள்பவரும் தமிழர் ஆவார். ஏனைய மக்களும் தமிழ்நாட்டில் உளர்.

(உங) ஏனைய மக்கள் யாவர் ?

ஏனைய மக்களில் மூன்று பெரும் பிரிவார் உளர்: (க) தமிழராயிருந்து பிற மதங்களாகிய ஆரியம், பௌத்தம், கிறித்தவம், இஸ்லாம் முதலிய மதங்களைத் தழுவினவர்; (உ) ஆரியர், பௌத்தர், கிறித்தவர், இஸ்லாமியர் முதலியோர்; (ங) ஓர் இனம் இன்னோர் இனத்தோடு மாறிக் கலந்து வந்தவர்.

(உச) தமிழராய் இருந்து, ஆரிய மதத்துக்கும் பிற மதங்களுக்கும் சென்றவர் யாவர் ?

தமிழ்நாட்டில் உள்ள பிராமணரில் தென் கலையார், தென் தேசத்து வடமர்கள், பஞ்ச திராவிடர் என்னும் பிரிவார், கோயிற் பூசை செய்யும் குருக்கள்மார், கோயிற் பூசை செய்யும் வைகானச வைணவர், தம்படிப் பார்ப்பனர், ஒட்டமாதவர் முதலியோரும்; கிறித்தவர்களில் ஐரோப்பிய நாட்டார் தவிர, தமிழ் நாட்டுக் கிறித்தவர்கள் அனைவரும்; காபூலிஸ், பட்டான்ஸ், அராபியர்களைத் தவிர ஏனைய இஸ்லாமியர்கள் அனைவரும்; தமிழ் நாட்டில் உள்ள சைனர், பௌத்தர், ஆரிய சமாஜத்தார் முதலியோரும் ஆவர்.

(உரு) இனக் கலப்பு உற்றவர் யாவர் ?

நீகிரோக்களுக்கும் தமிழருக்கும் பிறந்த வில்லியர் - வேடர், இருளர், குறும்பர் முதலியோரும்; மங்கோலியருக்கும் தமிழருக்கும் பிறந்த சில வகுப்பாராய் அங்கம், வங்காளம் முதலிய இடங்களில் உள்ளவர்களும், ஆரியருக்கும் தமிழ்ப் பெண்களுக்கும் பிறந்த பல வகுப்பாரும், ஆங்கிலேயருக்கும் தமிழ்ப் பெண்களுக்கும் பிறந்த பல வகுப்பாரும், அராபியர்களுக்கும் தமிழருக்கும் பிறந்த மலையாளக் கரையிலுள்ள சில வகுப்பாரும் ஆவார்.

பல இனத்தார் ஒரு நாட்டில் தங்கும் காலத்தில் இன மாறுதல் உண்டாவதைத் தடுக்க இயலாது. அதனாலேயேதான் ஜெர்மனி ஜெர்மானியருக்கே என்றும், பர்மா பர்மியருக்கே என்றும், ஜப்பான் ஜப்பானியருக்கே என்றும், சிங்களத் தீவு சிங்களவர்க்கே என்றும் எங்கும் கூக்குரல் கிளம்பியுள்ளது. தமிழ்நாடு தமிழருக்கே உரித்தானாலன்றி இனக்கலப்பைத் தடுக்க முடியாது. ஆங்கிலேயரும், ஜெர்மானியரும், ஜப்பானியரும் தங்கள் தங்கள் இனத்தைக் காப்பாற்ற எவ்வளவோ முயற்சிகளைச் செய்வதை நாம் பார்க்கிறோம்; அதுபோல் தமிழரும் தங்கள் இனத்தைப் பாதுகாக்க வேண்டும்.

## (உசு) இன்னும் யார் யார் தமிழ் நாட்டில் உளர்?

மேலே கூறியவர்களைத் தவிர, மார்வார் தேசத்து மார்வாடிகள் வட்டிக் கடை வைத்துத் தமிழர் பணங்களைக் கொள்ளை கொள்ளுகிறார்கள். குஜராத்திலிருந்து வந்த குஜராத்திகளும் வேறு வடவரும் வட்டிக்கடைகளும், மிட்டாய்க்கடைகளும், துணிக்கடைகளும், பலசரக்குக் கடைகளும் வைத்துத் தமிழ் நாட்டுச்செல்வங்களை வாரிச்செல்லுகிறார்கள். சைனா, ஜப்பான், சிங்களம், பாரசீகம் முதலிய இடங்களைச் சேர்ந்த மக்கள் வந்து தமிழ்நாட்டில் வாணிபம் செய்து ஊதியம் அடைந்து செல்லுகிறார்கள்.

## (உஎ) தமிழ் நாட்டு மக்கள் வளம்பெறச் செய்யவேண்டுவது யாது?

தமிழ்நாட்டு ஆட்சி தமிழரிடம் இருக்க வேண்டும்; தமிழ் நாட்டில் ஆலைத்தொழில்களும், மற்றக் கைத்தொழிற்சாலைகளும், வட்டிக்கடை முதலிய பல கடைகளும் தமிழர்களிடமே இருக்க வேண்டும்; பிற நாட்டார் தமிழ் நாட்டுக்கு வருவதானால் உத்தரவின்றி (அரசால் பாஸ்போர்ட் பெற்றாலன்றி) வருதல் கூடாது. அவர்கள் எல்லாரும் பண்டமாற்றுதல்களைச் செய்துகொண்டு போகலாமே யொழிய, தமிழ்நாட்டில் நிலையாய்க் குடியிருக்க அவர்களுக்கு இடம் கொடுக்கக்கூடாது. தமிழ்நாட்டில் தமிழருக்

குள் திருமணம் நிகழலாமே ஒழிய பிறநாட்டாருடன் தமிழ்ப் பெண்களைக் கலக்க விடக்கூடாது. பிறநாட்டாருக்குத் தமிழ் நாட்டில் குட வோலை (Vote - ஓட்) உரிமை கொடுக்கக் கூடாது. தமிழ்நாட்டில் பிறநாட்டார் சொத்துக்கள் வாங் கவும், உரிமை கொண்டாடவும் கூடா. இவ்வாறு பாதுகாத் தால் ஒழிய, தமிழ்நாடு வரம்பிழந்து, சிறிது நாளில் 'தமிழ்நாடு என ஒன்றிருந்ததா!' என்று கேட்கும்படியான நிலைக்கும் வந்து விடக் கூடும்.

அந்த நிலை இப்போதே வந்துவிட்டதற்கு அறிகுறியாகச் சென்னையில் இராயபுரம் மருத்துவ மாணவர் விடுதிக்குப் பின் புறமும் சேவகர் வீடுகட்கு முன்புறமும் அமைந்துள்ள தக்கணு மூர்த்திசமாதிக் கோவிலில் 'தமிழனுக்குச் சிறந்த தனிமொழி உண்டோ?' என்று பெரிய எழுத்தில் எழுதப்பட்டிருப்பதை நோக்க எந்தத் தமிழன் வயிறுதான் எரியாது. அதைத் தெரிந்த தமிழன் என்ன செய்தான்? தமிழர்களே, தூங்காதீர்கள்! காலம் கிட்டி விட்டது. விழியுங்கள், ஆவன செய்யுங்கள்! தமிழ் நாட் டைக் குறுக்கவும் தமிழ் மொழியைப் பாழ்படுத்தவும் "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்ற பழமொழிப்படி தமிழர் களிலேயே சிலர் கங்கணம் கட்டிக்கொண்டு இருக்கிறார்கள். பலர் நடுநிலைமை வாய்ந்து பேசாமல் இருக்கிறார்கள். மிகச் சிலரே வயிறெரிந்து ஆவன செய்ய முன்வருகிறார்கள். அவர் களுக்கும் ஆதரவு கிடைப்பது அரிதாயுள்ளது. தமிழர்களே! இனியும் வீண் காலம் போக்காமல் ஒன்றுசேர்ந்து வேண்டுவன செய்யுங்கள்.

## ங. மொழி.

(க) தமிழர்களின் மொழி என்ன?

*தமிழ் மொழி.*

(உ) மொழியினால் மக்களுக்குப் பெயராயிற்று? மக்களால் மொழிக்குப் பெயராயிற்று?

*மொழியினால் தான் மக்களுக்குப் பெயர் அமைந்தது. சுவர் இருந்தால் அன்றோ சித்திரம் எழுதலாம்? அதுபோல், மொழி இருந்தால் அன்றோ மக்களுக்குப் பேச்சு வரும். பேச்சு வந்தபின்தானே அப் பேச்சுக்குப் பெயர் அமைந்து மக்களுக்கும் ஆக வேண்டும்?*

(ங) தமிழ்நாட்டிற்குப் பெயர் எப்போது அமைந்தது?

*மக்கள் உற்பத்தியாவதற்கு முதன்முதல் இடம் வேண்டும். தமிழர் உற்பத்தியாவதற்கு இடமாயிருந்தது தமிழ்நாடாகும். தமிழர் உற்பத்தியான பின், கொஞ்சகாலம் பேச்சில்லாமல்* **கை—கால்—கண்** *முதலிய உறுப்புக்களின் அசைவைக் கொண்டு நாடக வடிவாக ஒருவர்க்கொருவர் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்து வந்தார்கள். தமிழ்மொழிக்கு இஃது அருவ நிலை.*

*பின் மக்களின் நா திறம்படப் பட, புட்கள் ஒலிப்பதையும், விலங்குகள் கத்துவதையும் கேட்டுக் கேட்டு நடிப்புகளுடன் மக்கள் தங்கள் கருத்துக்களை ஒருவர்க்கொருவர் ஒலி செய்து தெரிவிப்பாராயினர்.*

*பின், காலஞ் செல்லச்செல்ல அவ் ஒலிகள் பேச்சாக மாறி, பேச்சுத்திறம் முதிரவே மொழியாயிற்று.*

*முதலில் நாடகத் தமிழாயிருந்து, இசைத் தமிழாகிப் பின் இயல் தமிழாயின வகை இதுவே.*

நாடகத் தமிழாயிருந்த காலத்தில் நடிப்பு இயற்கை முறையில் இருந்ததாலும், நாடகம் ஓசையுடன் கூடி இசைத் தமிழாக இருந்தபோது ஓசைகள் முழுதும் இயற்கை ஓசையைத் தழுவி இருந்தமையாலும், பின் இயற்றமிழ்க் காலத்தில் நடிப்பு, இசை ஆகியவற்றுடன் கூடிப் பேச்சு வழக்கில் இயலும் போது இயற்கை ததும்பி இனிமை பயந்ததாலும் மக்கள் அம்மொழிக்குத் **தமிழ்** என்று பெயர் கொடுத்தார்கள்.

அதனாலேயே பேரிசைச் சூத்திர ஆசிரியர் ஆகிய **கழாரம்பர்** "**தமிழ் சிவம் இனிமையெனும் தனிப் பொருளாம்**" என்று கூறுவாராயினர். இசைத் தமிழ் இலக்கணத்தில் தமிழ் என்ற சொல்லுக்குச் சூத்திரம் செய்திருப்பதால் இசைத்தமிழ்க் காலத்திலேயே மொழிக்குப் பெயர் அமைத்து விட்டார்கள் என்று கொள்ளக் கிடக்கின்றது.

தமிழ்மொழியின் உற்பத்தியே நாடகம் முதலாவதாகவும், இசை இரண்டாவதாகவும், இயல் மூன்றாவதாகவும் ஏற்பட்டதால் பின்னால் தமிழை வளர்த்த பெரியார்கள் நாடகம் - இசை - இயல் என்ற முத்தமிழாகவே வளர்த்து, ஒவ்வொரு தமிழுக்கும் தனித் தனியாக இலக்கணமும் செய்துள்ளார்கள்.

மக்கள் இருப்பதற்கு நாடு வேண்டும்; நாட்டில் குடியிருக்க மக்கள் வேண்டும்; மக்கள் தங்கள் கருத்துக்களை ஒருவர்க்கொருவர் தெரிவித்துய்ய மொழி வேண்டும். ஆதலின், மொழி ஏற்பட்ட பின்னரே மொழிக்குப் பெயர் அமைந்து, பின் அம்மொழியைப் பேசும் மக்களுக்கு அப்பெயர் அமைந்து, பின் அம் மக்கள் இருக்கும் நாட்டிற்கும் அப்பெயர் அமைந்தது என்று அறிகிறோம்.

ஆதலின், ஆதியில் ஏற்பட்டமொழி தமிழ்மொழி என்றும், தமிழ்மொழி பேசுபவர்கள் தமிழர்கள் என்றும், பின் தமிழ் மக்கள் குடியிருக்கும் நாடு தமிழ்நாடு என்றும் பெயர்கள் உண்டாயின.

(ச) மேலே கூறிய முத்திறப் பாகுபாடுகள் வேறு மொழி களுக்கு உண்டா ?

கிடையா. தமிழ்மொழி ஒன்றே இயற்கை மொழி. ஏனைய மொழிகள் எல்லாம் அதனினின்றும் உண்டான செயற்கை மொழிகள். அதனுல், அவற்றிற் கிடையா.

(ரு) சம்ஸ்கிருத மொழி எப்போது, எப்படி உண்டாயிற்று?

சம்ஸ்கிருதம் என்ற சொல்லுக்கு நன்ருய்ச்செய்யப்பட்டது என்று பொருள். 5,000 ஆண்டுகட்கு முன்னர் இருந்த வியாசர் காலத்தில்தான் சம்ஸ்கிருத மொழி செய்யப்பட்டது. சம்ஸ்கிருதத்துக்குமுன் பூர்வத்தில் செய்யப்பட்ட பிராகிருதம் என்ற மொழி ஒன்று இருந்தது. அப்பெயர்க்குப் பூர்வத்தில் செய்யப்பட்டது என்று பொருள். அப் பிராகிருத மொழி பாளி - ஆரியம் முதலிய மொழிகளின் வழிமொழியாகும்.

(சு) சம்ஸ்கிருதத்துக்கு எழுத்துக்கள் உண்டா ?

சம்ஸ்கிருத மொழிக்கு எழுத்துக்கள் கிடையா. அன்றும் இல்லை; இன்றும் இல்லை. அம்மொழிக்கு வட நாட்டில் நாகர எழுத்துக்களேயும், தென் நாட்டில் கிரந்த எழுத்துக்களேயும் வடவர் அமைத்துக் கொண்டார்கள். நாகரம் மராட்டிமொழி எழுத்துக்களின் வழித்தானது. கிரந்தம் தமிழ்மொழி எழுத்துக்களின் வழித்தானது.

(எ) தமிழ்மொழிக்கு எழுத்துக்கள் எப்போது உண்டாயின ?

இயற்றமிழ் ஏற்பட்டுப் பேச்சு வழக்கில் மாத்திரம் சில காலம் இருந்தது. பின், அறிவர்கள் கூடி எழுத்துக்களை உண்டாக்கினுர்கள்.

அவ்வெழுத்துக்கள் முதன்முதல் உருவ எழுத்துக்களாயிருந்தன. அவை இப்போது (மோகஞ்செ டாரோ) மறைஞ்ச

தரை அல்லது மறைந்த தரை என்னும் இடத்தில் அகப்படும் வெட்டெழுத்துக்களைப் போன்றவை. உருவ எழுத்துக் காலத்தில் தான், எகிப்திய மொழி, சீன மொழி, பர்மிய மொழி முதலிய மொழிகள் தமிழினின்றும் பிரிந்தன.

நிலநூற்படி பனிமலை தோன்றி இன்றைக்கு இரண்டு கோடி ஆண்டுகள் ஆகின்றன. சிந்து, கங்கை நதிகள் பாயும் இடம் கடலாயிருந்தது நாடாகச் சுமார் 1,50,00,000 ஆண்டுகள் செல்லும் என்று வைத்துக் கொண்டால், உருவ எழுத்துக் காலம் ஆரம்பமாகி இன்றைக்கு 10,00,000 ஆகின்றன என்று கூறலாம்.

அந்த உருவ எழுத்துக் காலத்திலேயே தமிழ்மொழியில் முத்தமிழும் சிறப்பெய்தி இருந்ததென்பது மறைந்த தரையில் கண்டுபிடித்த ஓவியங்களாலும், கட்டிடங்களாலும், அணிகளாலும், விளையாட்டுக் கருவிகளாலும், மாளிகை அமைப்புக்களாலும், சிவலிங்கங்கள் முதலிய வழிபடு கடவுளரின் உருவங்களாலும் அறியக் கிடக்கின்றது.

பிறகு, ஒரு காலத்தில் ஏற்பட்ட மண்மாரியினால் மறைந்த தரையும் (Mohanjo Daro) அதைச் சூழ்ந்த இடங்களும் மண்மேடிடவே, வெகுகாலத்துக்குப் பின் மறுபடியும் புது ஊர்கள் அப்பக்கங்களில் ஏற்பட்டன. அப்போது, தமிழ்மொழிக்குக் கோல் எழுத்துக்கள் ஏற்பட்டன. கோல் எழுத்துக் காலத்தில்தான், சுமார் 10,000 ஆண்டுகளின் முன்னர், ஆரியர்கள் காகஸஸ் மலை நாட்டிலிருந்து வந்து தமிழ் நாட்டில் சிந்து நதி தீரத்தில் குடியேறினார்கள். அக்காலத்தில் தான் பாளி, மராட்டி, பஞ்சாபி, பலூச்சி, அராபி முதலிய மொழிகள் தமிழினின்றும் பிரிந்தன.

ஆரியர்களும் தங்கள் மொழியாகிய ஆரியத்துக்குத் தமிழ்க் கோலெழுத்தின் வழித்தாகிய மராட்டி எழுத்துக்களை எடுத்துக் கொண்டார்கள்.

4

பிறகு ஆரியர்கள் தமிழர்களுடன் கலாம் விளைத்து, தமிழரசர் குடும்பங்கள் சிலவற்றைச் சேர்த்துக்கொண்டு சிந்து நாட்டையும் கங்கை நாட்டையும் கைப்பற்றி **இந்துஸ்தானம்** என்று பேர் கொடுத்து, தங்களுக்குக் கீழ்ப்படியாத தமிழர்களை விந்திய மலைக்குத் தெற்கே விரட்டி விட்டார்கள்.

தெக்கணம் வந்த தமிழர்கள், ஆரியருக்கும் அவர்களுக்கும் ஏற்பட்ட பெரிய போரினால், சீரழிந்து நல்ல நிலைமையை அடையப் பல ஆண்டுகள் ஆயின.

அக்காலத்தில்தான் மொழியைச் சீர்திருத்தி, மொழிக்குக் கோல் எழுத்துகளை நீக்கி **வட்டெழுத்து**க்களை ஏற்பாடு செய்தார்கள். அக்காலத்தில்தான் தமிழினின்று தெலுங்கு மொழியும், கன்னட மொழியும் பிரிந்தன. வட்டெழுத்துக் காலத்தின் இறுதியில்தான் இராம இராவணப்போர் நிகழ்ந்தது. அஃது இற்றைக்கு 8,000 ஆண்டுகள் முன்னர் ஆகும். கி. மு. 6,000ல் இராம இராவணப் போர் நிகழ்ந்ததன் பின் நாடு பழைய நன்னிலைக்கு வர ஆண்டுகள் பல ஆயின. அக்காலத்தில் தமிழர்கள் மறுபடியும் மொழியைச் சீர்திருத்தி, அதுவரை இருந்த 16 உயிர் எழுத்துக்களை 12 உயிர் எழுத்துக்களாகவும், 35 மெய் எழுத்துக்களை 18 மெய் எழுத்துக்களாகவும் ஏற்பாடு செய்து, மொழிக்குச் **சதுர எழுத்துக்களை** அமைத்தார்கள். அந்த எழுத்துக்கள்தான் இப்போது நாம் எழுதும் எழுத்துக்கள்.

தமிழ்எழுத்துக்கள் 30 கொண்ட ஒரு மொழியாகவும், சொற் செட்டு, ஒலிச் செட்டு முதலிய நயங்கள் உடையதாகவும், உச்சரிப்புக்குத் தகுந்த எழுத்து வரிசைகளை உடையதாகவும் தமிழ்மொழியை அக்காலத்தில் செப்பம் செய்தார்கள். அப்படிச் செய்த மொழிக்குச் **செந்தமிழ்** எனப் பெயரிட்டார்கள்.

ஆதலின், செந்தமிழுக்கு முன் இருந்த தமிழ் **பழந்தமிழ்** ஆகும்.

பழந்தமிழுக்கு 16 உயிர்களும் 35 மெய்களும் ஆக 51 அக்கரங்கள் என்பது திருமூலர் நூலால் வெளியாகின்றது.

(அ) மலையாளமொழி எப்போது உண்டாயிற்று?

கி.பி. 694 முதல் கி.பி. 712 வரை இவ்வுலகில் வாழ்ந்து, பதிகள்தோறும் சென்று பதிகங்கள் பாடிய சேரநாட்டு அரசன் கழறிற்றறிவாரெனும் சேரமான் பெருமாள் என்பவரோடு நட்புக்கொண்டு கி.பி. 712-ல் திருவஞ்சைக்களத்தினின்றும் வடகயிலை சென்ற சுந்தரமூர்த்திகள் காலம் வரை மலையாள நாடு தமிழ்நாடா யிருந்தது. சேரமான் பெருமாள் பாடிய திருக்கைலாய ஞான உலாவையும் பொன் வண்ணத்தந்தாதி யையும் நோக்கினால் அவர் காலத்தில் சேர நாட்டில் தமிழ் சீரிய நிலையில் இருந்ததென்பது தெரியும். கி.பி. எட்டாம் நூற்றாண் டில் செந்தமிழ் நாடாயிருந்த மலையாள நாடு, இப்போது வேற்று மொழி நாடாக இருப்பதைப் பார்த்தால், அம் மலையாள மொழி கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்கு ஒரு நூற்றாண்டு பிந்தித்தான் ஏற்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. மலையாள மொழி யும் தமிழ் மொழியின் வழிமொழியே. அதனுடன் சம்ஸ்கிருத மொழி கலக்கக் கலக்கத் தமிழ்மயமாயிருந்த மலையாள மொழி சம்ஸ்கிருத மொழியின் வழித்தானது என்று கூறும்படி திரிந்து விட்டது.

இப்போது பேசப்படும் தெலுங்கு மொழியும் கன்னட மொழியுங் கூட சம்ஸ்கிருத மொழியுடன் அதிகமாய்க் கலக்கவே சம்ஸ்கிருத வழித்தான மொழிகள் போலத் தோற்றுகின்றன. அச்ச தெலுங்கையும், அளே கன்னட மொழியையும் நோக்கு வார்க்கு இது வெளியாகும். இதனால் சம்ஸ்கிருத மொழி வேறு எந்த மொழியோடு கலந்தாலும் அந்த மொழியும் கெடும் என் பது வெள்ளிடைமலையே. ஆதலின் தமிழில் வட மொழி கலக்காமல் பார்த்துக்கொள்ளுவது தமிழர்களுடைய கடமை யாகும்.

(ஆ) வேறு மொழிகளுக்கு இல்லாத தனிச்சிறப்பு தமிழ்மொழிக்கு உண்டா?

உண்டு. எழுத்துக்களிலே ழ, ற என்ற எழுத்துக்கள் தமிழ்மொழிக்குச் சிறப்பான எழுத்துக்கள் ஆகும். வேறு

மொழிகளில் இவற்றைக் காண்டல் அரிது. ஐரோப்பிய நாட்டு ஃபிரெஞ்சு மொழியில் ழ ஒலி உண்டென்றாலும், அந்த ஃபிரஞ்சு மொழி உண்டாவதற்கு நெடுங்காலம் முன்னரே அவ்வொலி சிறப்பாகத் திகழ்ந்தது தமிழ்மொழியிலேதான்.

இன்னும் திணைப்பாகுபாடுகள், காலப் பாகுபாடுகள், பால் வகுப்புக்கள், அகம் புறம் என்ற பொருட் பிரிவுகள் முதலியன **தமிழ் மொழிக்கே சிறப்பாக** உள்ளன. இத்தகைய சிறப்புகளைக் கொண்ட மொழி ஐந்து கண்டங்களிலும் இல்லை.

## (கo) பன்மொழிப் பண்டிதர்கள் இம்மொழியைப் பற்றித் தங்கள் ஆராய்ச்சியிற் கண்டதென்ன ?

(அ) மொழி வளர்ச்சியில் தமிழ் முற்பட்ட ஒட்டுச் சொல் நிலையிலும் (Agglutinative Stage), ஆரியம் பிற்பட்ட உட் பிணைப்பு நிலையிலும் (Inflectional Stage) இருக்கின்றமையால் தமிழ் மொழியினின்றுமே ஆரிய ஒற்றுமைப் பகுதிகள் கிளைத்திருக்கின்றன என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

(ஆ) கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக வடமொழிப் பேராசிரியர் **ராப்சன்** என்பவர், தமிழ்மொழியானது ஆரிய வேத மொழியிலும் அதன்வழித்தான பல ஐரோப்பிய மொழிகளிலும் கலந்துள்ளதென்று கூறுகிறார்.

இன்னும் அவர் ள—ண—ட—ச முதலிய ஒலிகள் திராவிடத்தினின்றும் ஆரியத்திற்குப் போனவை என்றும், திராவிடச்சார்பு பற்றியே பிற்காலத்தில் சொல்லமைப்பு வட மொழியில் அமைவதாயிற்று என்றும் கூறுகிறார்.

(இ) டாக்டர் கால்டுவெல் என்பவர் **நீர்—மீன்** முதலிய சொற்களைத் தமிழ்மொழியினின்றும் வட மொழி பெற்றிருப்பதைப் பலர் அறிவதில்லை என்று கூறுகிறார்.

(ஈ) வடமொழியில் உள்ள பால் வகுப்புக்களையும், ஒருமை பன்மை வகுப்புக்களையும் ஒருவன் நோக்குவானானல் எது

இயற்கை மொழி, எது செயற்கை மொழி, எந்த மொழியி னின்றும் எந்த மொழி உண்டாயிருக்கும் என்பவற்றையெல்லாம் ஐயமற உணர்வான்.

(உ) வடமொழியில் ஆண்—பெண்—அலி என்ற பகுப்புக் கள் உண்டு.

தமிழ் மொழியிலோ ஆண்—பெண்—பலர்பால்—ஒன்றன் பால்—பலவின்பால் எனப் பகுப்புக்கள் உண்டு.

வடமொழியில் ஒருமை—இருமை—பன்மை என்றும், தமிழ் மொழியில் ஒருமை—பன்மை என்றும் பாகுபா டிருக்கின்றமையை நோக்குங்கள்.

(ஊ) ஒரே பொருளைக் குறிக்கும் **பாஷாணம்** (கல்) என்னும் சொல் ஆண்பால் என்றும், (கல்) என்னும் சொல் பெண் பால் என்றும், **தாரம்** (மனைவி) என்னும் சொல் அலிப்பால் என்றும் கூறுவர் வடமொழியாளர். இஃது அறிவுக்குப் பொருந் தியதா என்று உன்னிப் பாருங்கள்!

(எ) பாண்டி (Punt) நாட்டிலிருந்து எகிப்து (Egypt) நாட்டில் குடியேறிய எகிப்தியர் மொழியும் நாகரிகமும் தமிழர் நாகரிகத்தின் வழித்தானது என்று **கர்னல் ஆல்காட்** கூறுகிறார்.

(ஏ) மொஹெஞ்சதாரோ (Mohenjo Daro) சீரும் சிறப்பும் பெற்று மேல் நாட்டோடு தரை மார்க்கமாய் வாணிபம் செய்த காலத்தில்தான், சுமேரியர், அக்காடியர், பாபிலோனியர் முதலி யோருடைய நாகரிக வளர்ச்சிக்குத் தமிழர் நாகரிகம் அடிப் படையாக இருந்தது.

(ஐ) வடுவூர் துரைசாமி ஐயங்கார் என்பவர் தம்முடைய (Lost links) "இழந்த தொடர்பு" என்ற நூலில் **தமிழ் மொழியே** உலகத்திலுள்ள எல்லா மொழிகளுக்கும் (சம்ஸ்

கிருதம் உள்பட) தாய் மொழி என்றும், இயேசு பேசினதும் பிரசங்கம் செய்ததும் தமிழே என்றும், முகமது நபி பேசினதும் எழுதியதும் தமிழே என்றும் கூறி, சில பைபிள் வாசகங் களேயும், கொரான் வாசகங்களேயும் அப்படியே படித்துக் (Transliterate) காட்டி யுள்ளார்.

ஆதலின், சென்ற 50 ஆண்டுகளாக ஆராய்ச்சியாளர் கள் பலர் ஆராய்ந்து ஆராய்ந்து முடிவு கட்டியது என்ன வென்றால், சம்ஸ்கிருதம் உள்பட உலகின்கண் உள்ள எல்லா மொழிகளுக்கும் தாய்மொழி தமிழ் என்பதும், தமிழ் வேர்ச் சொற்கள் (மூலச்சொற்கள் = Root) எல்லா மொழிகளிலும் நிறைய இருக்கின்றன என்பதும், ஆரியர் குமரிக்கண்டத்தி னின்றும் பிரிந்து வடக்கே மத்திய ஆசியாவுக்குச் சென்ற காலத்தில் தமிழ் பேச்சு வழக்கிலேயே இருந்தது என்பதும், பிறகுதான் உருவ எழுத்துக்கள் ஏற்பட்டதென்பதுமே ஆகும்.

(கக) தமிழ் மொழி இயற்கை மொழி என்று சொல்லு வது எப்படி ?

உலகின்கண்ணே எல்லா உயிர் (பிராணி)களும் வாயைத் திறந்த உடனே உண்டாகும் ஒலி அ ஆகும்.

பறவைகளில் காகம் கரையும் ஒலி க ஆகும். ஊமைக் கோட்டான் ஊளும் ஒலி ம் ஆகும்.

ஆகவே, இம்மூன்று ஒலிகளே (அ—க—ம்) இயற்கை ஒலிகள் ஆகும்.

கா—கா என்று கரைவதிலைலேயே காரணப் பெயராகக் காக்கைக்குக் காகம் என்ற பெயர் வைத்தார்கள்.

கரைதல் என்ற மொழியே ஆங்கிலத்தில் Cry என்ருகி, கரையும் பறவையைக் குறிக்கக் க்ரோ Crow, என்ருயிற்று.

க்ரீ இ — க்ரீ இ என்று ஒலி செய்யும் பறவைக்குக் குருவி என்று தமிழர்கள் பெயரிட்டார்கள். விலங்குகள் எல்லாம் கத்த

ஆரம்பித்த உடனே மா என்று கத்துவதால். விலங்குகளுக்கு முதலில் இட்ட பெயர் மா என்பதாகும்.

மனிதர்கள் குமரிக்கண்டத்தில், குறிஞ்சி நாட்டில் உண்டான பிற்பாடு, நாடக வடிவாகக் **காகைக** மொழி (**கால்—கை—கண்**) உதவி கொண்டு நடித்துக் கருத்துக்களை முதலில் தெரிவித்துக்கொண்டு இருந்தார்கள்; பின், புட்கள் விலங்குகள் இயற்கையாய் ஒலிக்கும் ஒலிகளாகிய **அ—க—ம்** என்ற ஒலிகளை இசைக்கத் தொடங்கினர்; அப்பொழுது **நுனிநா** அண்ணத்தை வருடலாயிற்று; அதன்வழி அப்போது முதலில் உண்டான எழுத்து ர ஆகும்.

அறிவோர்கள் அச்செயற்கை எழுத்தினையும் கூட்டி அ—க—ர—ம் என்று உருப்படுத்திக் கொண்டார்கள். இந்த நான்கு எழுத்துக்களினின்றுமே ஏனைய எல்லா எழுத்துக்களும் தமிழ்மொழியில் உண்டாயின.

```
அ—க — ர—ம்
|   |     |   |
ஆ   ங     ல   ப்
|   Λ     |   |
இ   ச த   ழ   வ்
|   | |   |
ஈ   ஞ ந   ள
|   |
உ   ய
|
ஊ
```

**கூட்டெழுத்து**

| | | |
|---|---|---|
| (அ+இ=) | எ | (ல்+த=) ற |
| | \| | |
| | ஏ | (ல்+ந=) ன |
| (அ+ய்=) | ஐ | (ள்+த=) ட |
| | | (ள்+ந=) ண |

(அ+உ=) ஒ
|
ஓ
(அ+வ்=) ஔ

அகரத்தை நீட்டினல் ஆகாரம்; இளித்தால் இகரம்; குவித்தால் உகரம்; இகர உகரங்களை நீட்டினல் ஈகாரம் - ஊகாரம். இப்படியே ஏனைய எழுத்துகளின் பிறப்பையும் அறிந்து கொள்ளுங்கள்.

அதனலன்றே தெய்வப் புலமைத் திருவள்ளுவர் "அகரம் முதல எழுத்தெல்லாம்" என்றார்; சுந்தரமூர்த்தி நாயனரும் "அகரம் முதல் எழுத்தாகி நின்ருய்" என்றும், சிவஞான முனிவரும் சோமேசர் முதுமொழி வெண்பாவில் "அகரம் முதல எழுத்தெல்லாம்" என்றும் கூறுவாராயினர்.

தமிழ்மொழிக்கு அகரம் என்ற நான்கு எழுத்துக்களுமே மூல எழுத்துக்கள். நாவில் மூன்று எழுத்துக்கள் இயற்கை ஒலியைக்கொண்ட எழுத்துக்களா யிருக்கின்றமையால் தமிழ் இயற்கை மொழி எனப்படும்.

இனி ஒலிகளுக்கு எழுத்துக்கள் ஏற்பாடு செய்யும்போது அகரத்துக்கு ஒரு புள்ளியும், ககரத்துக்கு ஒரு புள்ளியும், மகரத்துக்கு ஒரு புள்ளியுமாக இயற்கை ஒலிகளுக்கு மாத்திரம் வைத்து ஃ இம்மாதிரி எழுதலாயினர். இதற்கு அ—க—ம் இனம்=அகம் இனம்—அகஇனம்—அஃகேனம் என்று வழங்கினர்கள்.

அஃகேனத்திலிருந்தே ஏனைய எழுத்துக்களுக்கு வரி வடிவம் கற்பித்தார்கள். அஃகேனம் வரிவடிவம் எழுதுவதற்குக் கருவியாயிருந்தபடியால், அஃகேனத்திற்கு ஆயுதம் — ஆய்தம் என்றும் பெயர்.

இந்த ஆய்த எழுத்து உயிரெழுத்துக்களுக்கும் மெய் யெழுத்துக்களுக்கும் பிறப்பிடமானபடியால் அதனை அவ்விரண்

டிற்கும் இடையில் சிங்கநோக்காக அமைத்தார்கள். இவ்வாய்த எழுத்தின் உதவியைக்கொண்டு பிறமொழிகள் எல்லாவற்றையும் தமிழ்எழுத்துக்களால் எழுத முடியும் என்று காலஞ்சென்ற மாணிக்க நாய்க்கர் அவர்கள் எழுதிக்காட்டி உறுதிப் படுத்தி யுள்ளார்கள்.

உலகின்கண் எந்த மொழியைப் பேசும் குழந்தைகளும் வாயைத் திறந்து பேசத் துவங்கும்போதே மா (அம்மாவின் குறுக்கம்)—பா (அப்பாவின் குறுக்கம்) தா - தா (தாதா—தாய் என்பதின் குறுக்கம்) கா (அக்காவின் குறுக்கம்)—சோ (சோற்றின் குறுக்கம்) எனப் பேசத் துவங்குகின்றன. பின் தாய்மார் அவரவர்கள் மொழியை ஊட்ட, குழந்தைகள் பல மொழிகளைப் பேசுகின்றன. ஆதலின், தமிழ்மொழியே இயற்கை மொழி என்பது இதனால் தெளிவாம்.

## ௪. நூல்

(க) தமிழ்மொழியில் உள்ள நூல்கள் எவை?

தமிழ்மொழியில் நூல் என்றால் இலக்கணம் என்பது தான் ஆதியில் உள்ள பொருள்.

மரத்தில் நூல் போட்டால் அஃது ஒழுங்கு கெடாமல் அறுப்பதற்குப் பயன்படுவதுபோல், மொழி வரம்பிகந்து செல்லாமல் அதனை ஒழுங்காக நெறிப்படுத்தற்குப் பயன்படுவது நூல் ஆகும்.

இக்காலத்தில் நூல், புத்தகம் என்ற பொருளில்தான் வழங்குகிறது.

தமிழ்மொழியில் முத்தமிழுக்கும் தனித்தனி இலக்கண நூல்கள் உண்டு என்று மேலே கூறினோம்.

நாடக இலக்கணங்கள் :—செயிற்றியம் - சயந்தம் முதலியன.

**இசை இலக்கணங்கள் :—** முதுநாரை - முதுகுருகு - இசை நுணுக்கம் - பெருநாரை - பெருங்குருகு முதலியன.

**இயல் இலக்கணங்கள் :—** இயல் நூல் - பெரு நூல் - அகத்தியம் - தொல்காப்பியம் - வீரசோழியம் - நன்னூல் முதலியன.

**தாள இலக்கணங்கள் :—** தாள வகை ஒத்து - தாளசமுத்திரம் முதலியன.

**அவிநயம் :—** அவிநயர் செய்த அவிநய இலக்கணம் முதலியன.

**பொருள் :—** இறையனார் அகப்பொருள் - நம்பி அகப்பொருள் முதலியன.

இப்போது நமக்கு மிஞ்சியிருக்கும் முழு நூல்களாவன தொல்காப்பியமும், வீர சோழியமும், இறையனார் அகப்பொருளும், நம்பி அகப்பொருளும் ஆகும்.

**இலக்கியங்களில்,** பத்துப்பாட்டு - எட்டுத் தொகை - பதிற்றுப் பத்து - சிந்தாமணி - சிலப்பதிகாரம் - மணிமேகலை - வளையாபதி - குண்டலகேசி முதலியன.

**திருமுறைகளில்,** சைவர்க்குப் பன்னிரு திருமுறைகளும், வைணவர்க்கு நாலாயிரப் பிரபந்தமும்.

**ஞான நூல்களில்,** பதினான்கு ஞான நூல்கள்.

(உ) பன்னிரு திருமுறைகள் எவை?

| | |
|---|---|
| 1-2-3-ம் திருமுறைகள் | திருஞான சம்பந்தர் தேவாரம் |
| 4 - 5 - 6-ம் திருமுறைகள் | திருநாவுக்கரசர் தேவாரம் |
| 7-ம் திருமுறை | சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம் |
| 8-ம் திருமுறை | மாணிக்கவாசகர் பாடியவை திருவாசகமும் திருக்கோவையாரும் |

9-ம் திருமுறை — திருவிசைப்பா - திருப்பல்லாண்டு
10 ,, — திருமந்திரம்
11 ,, — ஆலவாயார், காரைக்கால் அம்மையார், கபிலர், நக்கீரர், பட்டினத்தார் சேரமான் பெருமாள் முதலியோர் பாடியவை.
12 ,, — பெரிய புராணம்.

(௩) பதினான்கு ஞான நூல்கள் எவை?

திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம், இருபா இருபஃது, உண்மை விளக்கம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்.

(௪) இவற்றைத் தவிர ஞான நூல்கள் உண்டா?

உண்டு. அவை 14 பண்டார சாத்திரங்கள்.

(௫) வேறு நூல்கள் உண்டா?

உண்டு. குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு - சிவஞான முனிவர் பிரபந்தங்கள் - மீனாட்சி சுந்தரம் பிள்ளை பிரபந்தங்கள் - புலவர்களால் பாடப்பட்ட தலபுராணங்கள் - அந்தாதி - கோவை - பிள்ளைத்தமிழ் முதலியன. ஔவையார் பாடிய நூல்களும் பல உள.

(௬) இக்காலப் புலவர்கள் இயற்றிய நூல்கள் ஏதேனும் உண்டோ?

உண்டு. திருவனந்தபுரம் P. சுந்தரம் பிள்ளை இயற்றிய மனோன்மணீயம், மறைமலை அடிகள் இயற்றிய மாணிக்கவாசகர் காலம் முதலியன.

(எ) தமிழ்நூல்களில் உள்ள குறைபாடுகள் என்ன?

தமிழ் மொழியில் கலை நூல்களும், நிலநூல் - உடல் நூல் - உள நூல் முதலியவையும், வேர்ச் சொல் விளக்க அகராதியும் இல்லாததே.

தமிழ் மொழியில் தமிழர்கள் சரித்திரங்களைக் காட்டும் நூல்களும், பூகோள நூல்களும் இல்லை. இக்காலம் கிடைத்திருக்கும் கல்வெட்டுக்களையும் இலக்கியங்களையும் அடிப்படையாகக் கொண்டு தமிழர் சரித்திரங்களைச் செப்பம் செய்தல் மிக நலம். சரித்திரம் சரியானபடி தெரியாததால் தமிழர்கள் தாங்கள் இன்னார் என்றும், தங்கள் நாடு இன்னதென்றும், தங்கள் மொழி தனிச் சிறப்புடையது என்றும் அறியாமல், நாடும் - மொழியும் கேடுறும் வண்ணம் விட்டுவிடுகிறார்கள். ஆதலின் மிகு விரைவில் செய்து முடிக்கவேண்டியவை சரித்திர நூல்களாகும்.

## ௫. தமிழர் கொள்கை

(க) தமிழர்களின் முக்கிய கோள்கை என்ன?

(1) கொல்லாமை (2) புலால் உண்ணாமை.

இக்கொள்கைகள் இல்லாமல், வேறு எந்த விதமான அறிவாற்றல் உடையவர்களாயிருந்தாலும் அவர்களை ஞானிகள் எனத் தமிழர்கள் கூறமாட்டார்கள்.

இவ்வறத்தைக் கடைப்பிடித்தோரே **சைவர்** எனப்படுவர். தமிழ்நாட்டு வேளாண் மாந்தரே **சைவர்** ஆவார். கொல்லாமை முதலிய அறங்களைக் கடைப்பிடித்த சைனர் - சாக்கியர் - சாங்கியர் - யோகர் முதலியோரைச் சைவர் என உலகம் வழங்காமையை நோக்குக.

இன்னும் வேற்று நாட்டார் இக்காலம் மேற்கண்ட அறங்களைக் கைப்பற்றி ஒழுகிவந்தபோதிலும் அவர்கள்

சைவர் ஆகக் கொள்ளப்படமாட்டார். உலகத்திற்கே முதன்முதல் இவ்வறங்களை இற்றெனக் காட்டி, அவற்றின் படி ஒழுகிவந்ததனாலேயே தமிழ்நாட்டு வேளாண் மக்களுக்குச் சைவர் என்ற பெயர் எங்கும் பெரு வழக்காய் வழங்கப் படுவதாயிற்று.

திருக்குறளில் அறத்துப்பாலிற் கூறப்பட்ட அறங்கள் எல்லாம் தமிழர்களுடைய சிறந்த கொள்கைகளாய்த் திகழ்ந்தன - திகழ்கின்றன.

(௨) தமிழர்கள் கைக்கொண்ட அறம் என்ன?

பொய்யாமை. இவ்வறத்தைத் தமிழ்நாட்டு மக்கள் உயிரினும் பெரியதாக எண்ணி அதன்படி ஒழுகிவந்தனர். இதனாலன்றோ ஒரு புலவர் "வையம் பெறினும் பொய் சொல்ல மாட்டார் தொண்டை நாட்டார்" என்று பாடி வைத்தார். 'ஒரு மொழியொழி தன் இனங்கொளற் குறித்தே' என்றபடி - அந்நாட்டைச் சேர்ந்த பிற தமிழ் நாட்டாரையும் இது குறிக்கும். தெய்வப் புலவரும் 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற செய்யாமை, செய்யாமை நன்று" என்று வற்புறுத்தி அழகு படக் கூறினார்.

வேளாண்மை (=விருந்தோம்பல்) செய்தல் அடுத்தபடியாக அவர்கள் கைக்கொண்ட அறமாகும்.

(௩) தமிழ் மக்கள் திருமணஞ் செய்துகொள்வது யாது கருதி?

திருக்குறளிற் கூறிய இல்லறங்களைச் செய்து அதன் பயனாகிய வீட்டின்பம் நுகரற்பொருட்டு. இதனை,

"அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்"

என்றார் இளங்கோ அடிகள்.

" செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பார்
நல்விருந்து வானத் தவர்க்கு "

என்றார் திருவள்ளுவர்.

ஆதலின், இயல்புடைய மூவராகிய பாணர் - கூத்தர் - புலவர், தென்புலத்தார் - தெய்வம் - விருந்து - ஒக்கல் - தான் - துறந்தார் - துவ்வாதார் ஆகிய இப் பத்து வகையாரையும் ஓம்புதலே சிறந்த அறமாகக் கொண்டனர் தமிழர்.

மேற்படி அறங்களை வழிவழியாகச் செய்ய மக்கட்பேறு இன்றியமையாதது. ஆகையால், மனைவியரை மணத்தலும், மக்களைப் பெறுதலுமாகிய இல்லறம் அவர்கள் கைக்கொண்ட அடுத்த நல்லறமாயிற்று. இவற்றைச் சிறந்த கொள்கைகளாகக் கொண்டனர் தமிழர்.

" மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு "

என்ற குறளையும் நோக்குக.

(ச) தமிழ்மகளிரின் தலைசிறந்த கொள்கை யாது?

அதுதான் **கற்பு** என்பது. இக் கற்புக் கொள்கை தமிழ் நாட்டாருக்கே சிறப்பானது. **வேறு எந்த நாட்டிலும் இக் கொள்கை இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடப் படுவது இல்லை.**

கொழுநனைத் தவிர வேறு ஆடவரை மனதிலும் நினையா மாண்புடையவளாய் மனைவி இருத்தல் வேண்டும். ஈருடலும் ஒருயிரும் போன்று இருப்பதே கற்பாகும். அதனாலன்றோ வள்ளுவரும்,

" தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை " என்றார்.

மனைவியர் தாம் நினையாதிருப்பதோடு, பிற ஆடவரும் தம் உளங்கொள நினையா வண்ணம் நடந்துகொள்ள வேண்டும். இதுதான் தமிழர் கொள்கை.

அதுபோலவே, ஆடவனும் பிறன் மனைவியைத் தாய், உடன்பிறந்தவள் எனக் கருதல் வேண்டும். பிறன் மனை நோக்காதான் ஆண்மையே ஆண்மை எனப்படும். ஆதலின் **பிறன் மனை விழையாமை** என்ற கொள்கை தமிழர்கள் கொண்ட சிறந்த கொள்கையாகும். இக் கொள்கைதான் தமிழரின் ஏனைய கொள்கைகளுக்கு அச்சாணி போன்றது. ஒருவனுக்கு ஏனைய கொள்கைகள் இருந்தும், இப் பிறன்மனை நோக்காப் பேர் ஆண்மை இன்றேல், அவன் எடுத்த பிறவி வீணாகும். உலகம் நகும்.

திருவள்ளுவர் கூறிய '**கற்பு**' என்னும் கொள்கை ஆண் பால் பெண்பால் என்ற இருபாலார்க்கும் உரியதே. ஆண் பாலாரிற் சிலர், கற்பொழுக்கம் பெண்பாலார்க்கே உரித்து எனக் கூறி, தம் அறியாமையை வெளியிட்டு, தம் மறைவு ஒழுக்கத்திற்குச் சாதகம் செய்துகொள்ளுகின்றனர். அது பொருந்தாக் கொள்கை. மக்கட் பிறப்பில் ஆணுக்கு ஒரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதியாக என்றும் இருக்க முடியாது. வள்ளுவரும் அப்படிக் கூறவில்லை. பத்துப் பேர் உரையில் பரிதி உரை கற்பு நிலையை இருபாலார்க்கும் உரித்து எனக் கூறுகின்றது. ஆடவர் மனம் போனவாறு செல்லுதல் மக்கட் பண்பு ஆகாது. மனைவியை உடைய ஆடவன் தன் மனைவி கற்பு நிலை வழாஅது இருக்கவேண்டும் என்று நினைப்பது போலவே, கணவனைப் பெற்ற மங்கை ஒருத்தி தன் கணவன் கற்புநிலைக்கு மாறாகப் பிற மங்கையர்களை நினையாதிருக்க எண்ணுவது இயற்கைதானே.

### (ரு) ஆனால், தமிழ்நாட்டில் ஆடவர்கள் பலர் பல மனைவியரை மணப்பது ஏன்?

பன்மனைவியரை மணக்க விதியில்லை. விதி உண்டு போலுங் கூறித் தம் ஆசையினை நிறைவேற்றிக் கொள்பவர் பலர். அவையெல்லாம் பின்பற்றக்கூடிய ஒழுக்கங்கள் ஆகா,

(சு) அகப்பொருள் இலக்கணத்தில் பரத்தையிற் பிரிவு என்ற துறை ஒன்று உள்ளதே, அஃது ஏன்?

காதற் பரத்தை மனைவியாகாள். மேலும் பிரிதல் நிமித்தம் ஓதல் - காவல் - பரத்தையிற் பிரிவு - பகை தணிவினை முதலிய வாகக் கூறப்பட்ட காரணங்கள் ஆறனுள் பரத்தையிற் பிரிவு ஒன்று. பரத்தைக்காக மனைவியை விட்டுப் பிரிபவன் தமிழ் மக்களுள் அக்காலத்தில் எங்கேயோ ஒருவன் இருப்பான். பெரும்பாலும் அது வழக்கன்று. ஆனல், நூல் எழுதும்போது அதற்கும் இலக்கணம் வகுக்கவேண்டி வகுத்ததே ஒழிய அது தமிழருக்குள் பெரு வழக்காய் இருந்ததாக எண்ணக்கூடாது. அம்மாதிரி ஒழுகிய மக்கள் பெரியோரால் கடிந்துரைக்கப்படுவதையும் நூல்களில் காண்கின்ரும். ஆதலின், அதனைத் தமிழர் கொள்கை என்று கொள்ளற்க.

(எ) மக்கட்பேறு இல்லாதவர்கள் இரண்டாம் மணம் செய்துகொள்ளலாமா?

நன்மக்கட் பேறு வேண்டுவது முதன்மையே. இல்லற வாழ்வின் முக்கிய கருத்தும் நன்மக்களைப் பெற்று நாட்டுக்கு உழைப்பதே. உண்மையில் முதல் மனைவி மலடியாயும், அல்லது நோய்வாய்ப்பட்டும், என்றும் இல்லற வாழ்க்கைக்குப் பயன்படாதவளாயும் இருந்தால், அவளுடைய சம்மதத்தின்மேல் இரண்டாம் மணம் செய்யலாம்; அல்லது முதல் மனைவி இறந்தபின் மக்கட்பேறு காரணமாகச் செய்துகொள்ளலாம். முதல் மனைவிக்கு மக்கட்பேறு இருந்து அவள் இறந்துவிட்டால் இரண்டாம் மணம் செய்யக்கூடாது. மூன்று நாலாம் மணமக்களுக்கும் இதுவே விதியாகும்.

(அ) மனைவி உள்ளவன் எந்தக் காரணத்தினுலாவது தனித்திருக்கும்போது பரத்தையிடம் செல்லலாமா?

கூடாது. அதனுல் கற்புநிலைக்குப் பழுது நேரும். மனைவி எப்படிப் பிற ஆடவரை மனதிலும் நினைக்கக்கூடாதோ, அப்

படியே இவனும் பாத்தையை நினைக்கக்கூடாது. பாத்தையருங் கூட இவனைப்பற்றி நினைக்கும்படியாக இவன் நடந்துகொள்ள லாகாது.

(கூ) இறுதியாகத் தமிழர் கோண்ட கோள்கை என்ன?

கடவுட் கொள்கை. இதனைத் தமிழர் ஆராய்ந்து முடிவு கட்டியதுபோல் எந்நிலத்தாரும் எம்மொழியாரும் ஆராய வில்லை.

நாம் பிறப்பதற்கு முந்தியே நாம் இருப்பதற்கு உலகத்தையும், நாம் பிழைப்பதற்கு அவ்வுலகில் காய் - கனி - கிழங்கு முதலிய உணவுப் பொருள்களையும் உண்டாக்கி, அப் பொருள்களை நுகர்வதற்கு நம் உடம்பில் கருவிகளையும் படைத்து, அப் பொருள்களை நுகரும்போது ஓர் இன்பத்தையும் உணர்த்தி, இது சிற்றின்பம், இதைவிடப் பேரின்பம் ஒன்று இருக்கிறது எனத் தெரிவிக்கும் ஒருவன் அருவாய் இருக்கிறன்; அவன் தான் கடவுள் என்று முதன்முதல் உணர்ந்தவர் தமிழரே. அக் கடவுளை இதுவரை அறிந்துகொள்ள முடியாமல் நம் அறிவுக் கண்களை மறைப்பது, அகங்காரம் என்னும் ஆணவ மலம் ஆகும் என்று உய்த்தறிந்தவர்களுந் தமிழரே. அம் மலத்தை ஒழித்து இறை ஒளியை நாடுவதே பேரின்பம் என ஆராய்ந்து முடிவு கட்டியதும் தமிழரே. இம்மாதிரி பதி - பசு - பாசங்களை ஆராய்ந்து வீட்டு நெறியைத் தெரிவிக்கும் கொள்கையைத்தான் **சைவ சித்தாந்தக் கொள்கை** என்பர். இதனையே ஆங்கில அறிவராகிய ஜி. யு. போப் பாதிரியார் "சைவசித்தாந்தம் என்பது தமிழர்களின் தேர்ந்த விளைபயனாகும் (Saiva Siddhanta is the choicest product of the Tamilians)" என்று கூறுவாராயினர்.

சைவசித்தாந்தக் கொள்கைதான் உலகமக்கள் எல்லோருடைய கொள்கைகளையும் தன்னுட் கொண்டு தான் அவற்றின் மேலாய் மிளிர்வதாகும்.

ஆதலின், கொல்லாமை, புலால் உண்ணாமை, பொய்யாமை, விருந்தோம்பல், கற்புடைய மனையாளோடு இல்லறம் புரிதல், நன்மக்களைப் பெறுதல், பிறன்மனை விழையாமை, பரத்தையிற் சேராமை, பன்மனைவியரை மணவாமை, இன்னும் திருக்குறள் இல்லற இயலில் கூறப்பட்டுள்ள இதர அறங்கள் முதலியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகல், பதி - பசு - பாசம் ஆராய்தல், வீட்டு நெறி நிற்றல் ஆகியவையே தமிழர் கொள்கைகள் ஆகும்.

முற்றும்.



---